29th March 1961]

*Families of ryots (employment)*

* 1162 Q.—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) குடியானவர்களின் மனைவிகள் உபரி வருமானம் சம்பாதிக்க சென்னை அருகே தேர்ந்தெடுக்கப்பட்ட கிராமம் எது ?

(இ) வருமானத்தை அதிகரிக்க கடைபிடிக்கப் போகும் முறைகள் என்ன ?

(உ) இதன் மூலம் உபரியாக என்ன வருமானம் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ), (இ) & (உ) குடியான வர்களின் மனைவிகள் உபரி வருமானம் சம்பாதிப்பதற்கான திட்டத்திற்காக சென்னை அருகே ஒரு கிராமமும் தேர்ந்தெடுக்கப்படவில்லை. இப்படி ஒரு திட்டமும் சர்க்கார் ஆலோசனையில் இல்லை.

*Coastal area, Ramanathapuram (nature of soil)*

* 1163 Q.—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it is a fact that the soil in the coastal area of Ramanathapuram is saline in nature ;

(*b*) if so, the steps taken to change the saline nature of the soil and bring the same under cultivation; and

(*c*) whether it is a fact that people have taken to fishing in the coastal area because of the saline nature of the soil?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Except for a small percentage of waste lands which are saline, most of the lands in the coastal area are sandy which are suited for short term paddy crops and millets besides being well suited for coconut and casuarina.

(*b*) Saline resistant strains are being tried by the Paddy Section of the Agricultural Department to release the same in the Ramanathapuram district. Crops like ragi which come up fairly well in such areas are being recommended. Green manuring the areas regularly is also being recommended by the Agricultural Department.

(*c*) People have taken to fishing mainly because the district is endowed by Nature with good sea fisheries resources and fishing is more lucrative than agriculture in this area. The fishing industry exists here from time immemorial.

SRI K. VINAYAKAM : Sir, has this portion of earth, which is saline in nature, reacted properly to the experiment and efforts conducted by the Agriculture Department to convert into better type of lands?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is not a question of converting the land. There are saline resistance varieties produced in Research Stations and they react quite all right.

[29th March 1961

Sri A. VEDARATHNAM : ஸார், இந்த ஸலைன் ஸாயிலுக்கு S.R.B. 26 என்ற நெல் நல்ல பலன் உள்ளதாக இருக்கிறது என்று கூறப்படுகிறதே, அது பரீட்சை செய்யப்பட்டதா, அதன் பலன் என்ன ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : ஒன்று கனம் அங்கத்தினருக்குச் சொல்ல வேண்டும். இந்த ஸலைன் லாண்ட் ரொம்பக் கொஞ்சம் அந்த மாவட்டத்தில். அதிகமாகக் கடலோரப் பகுதிகள் மணல் பாங்காக இருப்பதால் மானுவாரியாக நெல் பயிரும், புஞ்சைப் பயிரும் பயிரிடப்படுகின்றன. ஸலைன் லாயிலுக்குத் தகுந்த வகையான விதைகள் அனுப்பப்படுகின்றன. என்ன விதைகள் என்ற விவரம் என்னிடம் இல்லை.

Sri V. SUBBIAH : ஸார், உவர் மண்ணாக, உப்பு மண்ணாக இருப்பதை மாற்றி நல்ல நிலமாகச் செய்ய, பனை ஓலைகளைப் போட்டுப் பதித்துவிட்டால், நல்ல நிலமாக மாறும் என்பது தெரியுமா ? நிபுணர்கள் அந்த முறையைக் கையாளுகிறார்களா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : அதைப்பற்றிய விவரம் என்னிடத்தில் இல்லை. இருந்தாலும், ஸலைனாக இருப்பது குறைவாகத் தான் இருக்கிறது. அதற்கேற்றவாறு என்ன விதைகள் போட வேண்டும் என்று பரிசீலனை செய்து, அப்படிச் செய்வதில் வெற்றிகரமாக இருக்கிறது. மற்றவைப்பற்றி ஆராய்ச்சி இலாகாவினர் கவனிக்கிறார்கள்.

*Operation theatres in hospitals (air-conditioning)*

* 1164 Q.—Sri V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு ஜில்லாவிலுள்ள சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் எர்-கண்டிஷன் ஆப்பரேஷன் ரூம்கள் கட்ட உத்தேசமுண்டா ?

(இ) எப்போது எந்தெந்த ஆஸ்பத்திரிகளில் ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) & (*b*) A proposal for the air-conditioning of the two operation theatres in the Government Headquarters Hospital, Vellore, is under the consideration of the Government. There is no proposal for the air-conditioning of the operation theatres in the other hospitals in the district of North Arcot.

Sri V. K. KOTHANDARAMAN : ஸார், போன வாரம் என்று நினைக்கிறேன், ஒரு கூட்டத்தில் எல்லா ஆஸ்பத்திரிகளையும் எர்-கண்டிஷன் மயமாக ஆக்கப் போகிறோம் என்று அமைச்சர் பேசியிருக்கிறார்கள் ; பத்திரிகையில் வந்திருக்கிறது. ஜில்லா ஹெட்க்வார்ட்டஸ் ஆஸ்பத்திரிகளை எர்-கண்டிஷன் மயமாக்கும் சமயத்தில், அதேபோல குறைந்தபட்சம் தாலூகா ஹெட்குவார்ட்டர்ஸ் ஆஸ்பத்திரிகளையும் செய்ய ஏற்பாடு செய்யப்படுமா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் தாலூகா ஆஸ்பத்திரிக்கு போய்விட்டார், சென்னையில் இருக்கும் ஜெனரல் ஆஸ்பத்திரியிலேயே செய்யவில்லை. இங்கே செய்ய வேண்டும் என்று என் ஏற்பட்டதென்றால், ஹெல்த் எக்ஸிபிஷனில் கொஞ்ச பணம், 7,000 ரூபாய் அளவில் மீந்தது ; சென்ட்ரல் ஹெல்த் மினிஸ்டர் ரூபாய் 10,000 கொடுத்தார்கள், ஆக 17,000-ஐ வைத்துக்கொண்டு செய்யலாம் என்றால், எஸ்டிமேட் கேட்டால், அது 94,000, ஒரு லட்சத்திற்கு ஏறக்குறைய வருகிறது. அதனால்தான் கொஞ்சம் தயக்கம்.

*Cinchona plantation workers (meals charges)*

* 1165 Q.—Sri N. MARUDACHALAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சர்க்கார் ஆஸ்பத்திரியில் (சிங்கோனா) தொழிலாளர்களிடமிருந்து சாப்பாட்டுக்காக தினசரி நான்கு அணா பிடித்தம் செய்யப்படுகிறதா ?